29th September 1958]

SRI N. R. THIAGARAJAN : இந்தத் திட்டம் நீண்ட நாட்களாக பரிசீலனையில் இருக்கிறது. நீங்களே வந்து பார்த்திருக்கிறீர்கள். முதல் அமைச்சரும் வந்து பார்த்திருக்கிறார். நிதி அமைச்சரும் வந்து பார்த்திருக்கிறார். அந்த மக்கள் பெருவாரியாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். தயவுசெய்து அதைப் பரிசீலனை செய்து, அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலாவது சேர்த்துக்கொள்ள முயற்சிப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இந்தத் திட்டத்தைப்பற்றி ஒரு முறைக்குப் பலமுறை பரிசீலனை செய்துதான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று இந்திய சர்க்காருக்கு அனுப்பப்பட்டது. இருந்தாலும், அதனால் பலன் அதிகம் இல்லை என்ற காரணத்தால், அது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது பிரதம என்ஜினீர் அவர்கள், இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில்தான் சேர்க்கவேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறார்கள். அதுவும், அமராவதித் திட்டம், மேட்டூர் கனல் திட்டம், லோயர் பவானி திட்டம் ஆகியவைகளை நடைமுறையில் பார்த்துத்தான் பிற்பாடு இதைப்பற்றி முடிவுக்கு வரவேண்டும்.

*Manangondanur Irrigation Schemes*

* 613 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலூகா, மானங்கொண்டான் ஆறுபாசன விஷயம் எந்த நிலையிலிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The scheme has been completed in all respects including land acquisition.

SRI A. VEDARATHNAM : இதற்காக அரசாங்கம் செலவு செய்த பணம் அரசாங்கத்திற்கும் பயன் இல்லாமல், விவசாயிகளுக்கும் பயன் இல்லாமல், பாசன வசதி அளிக்காத காரணத்தால் வீணாகியிருக்கிறது. அங்கே விவசாயிகளுக்கு அதன்மூலம் பாசன வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கே ஒரு காஸ்வே போட வேண்டியிருந்தது. இந்தத் திட்டத்தில் 450 ஏக்கர் நிலத்திற்கு வசதி ஏற்படும், 112 டன் அரிசி உற்பத்தி அதிகமாக ஏற்படும் என்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது.

*Police dogs and District Headquarters*

* 614 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to keep at least one dog in each district headquarters to assist the Police in the investigation of crimes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI S. LAZAR : இதற்குத் தேவை இருக்கிறதென்பதை அரசாங்கம் உணருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தேவை இருப்பது மட்டும் போதாது. இதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்யவேண்டும். நாய்களைக் கொடுத்தாலும், அந்த நாய்களை வைத்து வேலை வாங்குபவர்களுக்குப் பயிற்சி வேண்டும். ஆகையால், இந்தக் கஷ்டங்களை உத்தேசித்துத்தான் சென்னையிலே மட்டும் வைத்துக்கொள்வது என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது.

SRI K. B. S. MANI : இம்மாதிரி உயர்ந்த ரகமான நாய்களைத் தனிப்பட்டவர்கள் வைத்திருந்தால், அந்த நாய்களை சர்க்கார் ட்ரெயினிங் சென்டருக்கு அனுப்பிப் பயிற்சி அளிப்பார்களா ? அதற்கான செலவுகளைச் சர்க்கார்

ஏற்றுக்கொண்டு, அந்தப் பயிற்சியை அவைகளுக்கு அளித்து, அவைகளை ஜில்லா தலைமையிடங்களில் வைத்திருக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : குற்றங்களைக் கண்டு பிடிப்பதற்காக நாய்கள் இருக்கின்றன. ஆகையால், தனிப்பட்டவர்களிடம் இதை விட முடியாது.

**SRI M. C. MUTHUKUMARASWAMY** : பகுத்தறிவில்லாத நாய்களைக் கொண்டு பகுத்தறிவுள்ள மனிதர்கள் செய்யும் திருட்டுகளைக் கண்டுபிடிக்க அவைகளுக்குப் பயிற்சி கொடுப்பதற்குப் பதிலாக, பகுத்தறிவுள்ள மனிதர்களுக்கே நல்ல முறையில் பயிற்சி அளித்து, அவர்களைக் கொண்டே திருட்டுக்களைக் கண்டுபிடிப்பதற்கான நடவடிக்கையை அரசாங்கம் எடுக்குமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : நாய்களுக்குப் பகுத்தறிவு இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது.

*Fee concessions*

* 615 *Q.*—SRI S. LAZAR (on behalf of Sri T. T. Daniel) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Christian converts of Scheduled Tribes and Backward Communities are entitled to fee concession?

THE HON. SRI C. SUBRAMANIAM : A pupil belonging to any of the Scheduled Tribes or to any of the communities included in the list of most backward classes will be granted fee concession irrespective of his religion while a pupil belonging to any of the other backward classes who is in receipt of a fee concession shall not be deprived of it, if he becomes a convert to any other religion while holding the concession.

**SRI A. V. P. ASAITHAMBI** : இம்மாதிரி புத்த மதத்திற்கு மாறியவர்களுக்கும் தற்போது சம்பளச் சலுகை வழங்கப்படுகிறதா ? அல்லது வழங்க ஏற்பாடு செய்வார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : நம் ராஜ்யத்திலே யாரும் புத்த மதத்தைத் தழுவியதாகத் தெரியவில்லை.

**SRI S. LAZAR** : மதத்திற்கு அப்பாற்பட்ட ஒரு அரசியலமைப்பைக் கொண்டிருக்கும் நாம், மதத்தின் அடிப்படையிலே இந்த வித்தியாசத்தைக் காண்பிப்பதற்குக் காரணம் என்ன ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : மதத்தின் அடிப்படையில் இருக்கும் வித்தியாசத்தை நீக்குவதற்குத்தான் முயற்சி செய்திருக்கிறோம்.

*Minor Irrigation Schemes*

* 616 *Q.*—SRI N. R. THIAGARAJAN (on behalf of Sri P. S. K. Lakshmipathi Raj) : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government intend to execute the following schemes prepared under the Special Minor Irrigation Programme :—

(1) Varadhamanadhi Anicut Scheme in Ayakudi Zamin area, Palni taluk; and

(2) Kudiraiyar Anicut Scheme near Pappanpatti?